கருவெளி ராச.மகேந்திரன்



# ட்டு

சிறுகதை

உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் எழுதப்பட்டது

கருவெளி கலையகம் வெளியீடு

அனைத்து ஜீவன்களுக்கும்
சமர்ப்பணம்

## நூல் பற்றி..

*நிகழும் அத்தனையையும் என்னால் நூலாக்கிவிட இயலாது. அதற்கான காலம் நம் கையில் இருப்பதாய் எனக்குத் தோன்றவும் இல்லை. ஆனால் சில நிகழ்வுகளை உறுதியாக எழுதிவிட வேண்டும் என்ற உந்துதலை அந்த நிகழ்வுகளே தந்து விடுகின்றன. இந்தக் கதையின் தலைப்பே உங்களுக்கு இன்னும் விளங்கி இருக்காத நிலையில், அத்தலைப்பு பற்றி கதை ஓட்டத்தில் நீங்களே அறிந்து கொள்வீர்கள் என்ற நம்பிக்கையில் எனக்குத் தோன்றிய பல தலைப்புகளில் இந்த தலைப்பைத் தேர்ந்தடுத்து வைத்துள்ளேன். இந்த நிகழ்வை ஒரு படைப்பாக பதிவு செய்வதற்கு முக்கிய நோக்கம் இருக்கிறதென்பதனை வாசித்து முடிக்கும் முன்னரே நீங்களே உணர்ந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன். அவளோடு ஒரு பயணம் என்ற தொகுப்பில் இந்தச் சிறுகதை இடம்பெறுவதற்கும் வாய்ப்புள்ளது என்ற செய்தியை மட்டும் இப்போது உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.*

*(சு)வாசித்துவிட்டு உங்களுக்குள் சிந்தியுங்கள், உறவுகளுடனும் நட்புடனும் சேர்ந்து சிந்தியுங்கள். மனிதத்தை அடுத்த தளத்திற்கு எடுத்துச் செல்ல என்ன செய்வதென்று யோசியுங்கள். உங்கள் கருத்துக்களை விமர்சனங்களை எனக்கு எழுதி அனுப்புங்கள். இந்த சிறுகதையை வாசித்து விட்டு உலகின் ஏதேனும் ஒரு மூலையில் ஒருவரது மூளையின் மூலையில் மாற்றங்கள் குறித்து சிந்தித்தால் இதனை எழுதியதன் பயன் கிட்டி விட்டதாகவே நம்புகிறேன். அதனை நீங்களும் நம்பினால் பலரிடமும் பகிர்ந்து கொள்ளுங்கள்.*

*என்னைத் தொடர்பு கொள்ள* karuveli.mahendran@gmail.com *என்ற மின்னஞ்சல் முகவரியைப் பயன்படுத்தவும்.*

*எனது படைப்புகளை தொடர்ந்து பெற விரும்பினால் உங்கள் விருப்பம் குறித்து அந்த மின்னஞ்சலில் குறிப்பிடவும். படைப்புகள் மின்னஞ்சலில் உங்களை வந்து சேர வகை செய்கிறேன்.*

*தொடர்ந்து (சு)வாசியுங்கள்..*

*அன்புடன் । "கருவெளி" ராச.மகேந்திரன்*

## யாரை அழைப்பது?

அவளுக்குக் கோபம் வந்தது, மிக அதிகமாகக் கோபம் வந்தது. பெண்ணாக பிறந்ததற்காக தனது அடிப்படை உரிமைகளும் மறுக்கப்பட்ட போது வந்த அந்த கோபங்களைக் காட்டிலும் இது இன்னும் கொஞ்சம் அதிகமாக, மிக அதிகமாக இருந்தது. அதனை கட்டுப்படுத்த இயலாமல் உடன் அழுகையும் வந்தது. இந்தியாவில் பிறந்ததற்காக முதன் முதலில் மிகவும் வருத்தப்பட்டாள். இதனை புண்ணிய பூமி என்று சொல்லி வளர்த்ததெல்லாம் மாபெரும் பொய் என்பதனை அவள் ஆழமாகச் சிந்திக்க வேண்டிய நிலைக்கு அன்றைய நிகழ்வு அவளை அழுத்தி தள்ளி இருந்தது. உணவு உண்ண விருப்பமில்லை, அதனால் உணவை தயாரிக்கவும் விருப்பமில்லை. தான் படித்த படிப்புகளும், பெற்ற பட்டங்களும் அனைவரும் போற்றும் தனது நேர்மையும் குணாதிசயங்களும் அத்தனையும் வெற்றாக்கி அவள் மனதை ரம்பம் போட்டு அறுத்துக் கொண்டே இருந்தது அன்றைய நிகழ்வு.

யாரிடம் கேட்பது? யாரிடம் சொல்வது? அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. சிறு வயது முதலே அத்தகைய சம்பவங்களை அவள் சந்திக்க வேண்டிய சூழலில் தான் இந்த சமூகம் கட்டமைக்கப் பட்டிருக்கிறது என்பதனை மீண்டும் மீண்டும் அறியும் போது அவளுக்குள் கோபம் இன்னும் அதிகரித்தது. வடிந்தோடிய கண்ணீர், வரலாறு முழுவதும் வடிந்தோடிய கண்ணீர் அவள் கண்களிலும் வழிந்தோடிக் கொண்டிருந்தது.

தனக்கிருக்கும் ஆறுதல் தரும் உறவான தன் பெற்றோருக்கு அழைத்துக் கேட்பதென முடிவெடுத்தாள். இலஞ்சம் கொடுக்க விரும்பாததால், மறுத்ததால் கணவனையும் பிள்ளைகளையும் இன்னொரு ஊரில் விட்டு தனியே வந்து தான் பார்க்கும் அரசு வேலைக்காக அனாதையாய் படும் மனவேதனைகள் போதாதென்று இடையில் இது போன்ற நிகழ்வுகள் அவளது இருப்பின் அவசியத்தினை மென்மேலும் கேள்விக்குறியாக்கின. பெற்றோருக்கு மேலும் மன உளைச்சலைத் தர விரும்பாமல் கைபேசியை எடுத்த இடத்திலேயே வைத்தாள். தன் எண்ணங்களை எங்கெங்கோ திருப்ப முயன்றாள். எதுவும் முடியாமல் மீண்டும் கையில் எடுத்தாள் தன் கைபேசியை.

## தந்தை சொல்மிக்க..

அவள் நினைவு தெரிந்தவரை, இத்தகைய நிகழ்வை, அனுபவத்தை இதுவரை பெற்றோர்களிடம் பகிர்ந்ததில்லை. அத்தகைய விவாதங்கள் வீட்டில் நிகழ்ந்ததும் இல்லை. அவள் வீடு, அவள் பெற்றோர் அவள் வீட்டின் நிகழ்வுகள் மற்ற வீடுகளைப் போல் அவள் மட்டும் அறிந்தது என்றாலும் அதில் பலர் அறியாத அதிசயங்கள் புதைந்து கிடக்கும் வீடு, அவளது பெற்றோர்களும் அதற்கு விதிவிலக்கில்லை. அதனால் என்ன பயன்? அவளுக்கு நிகழும் எதனையும் அது தடுத்து நிறுத்தி விடப் போவதில்லை. சிறு வயதில் அதிசய சக்தியோடு தான் பல அதிசய செயல்கள் செய்ததாய் வளர்ந்த பின் அவள் பெற்றோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறாள். அதனாலும் எந்தப் பயனும் இல்லை. அவை யாவும்

இன்று நடந்தது போன்ற நிகழ்வுகளை ஒரு போதும் நிறுத்தி விடப் போவதில்லை. அதனை நினைக்க நினைக்க அவளுக்கு இன்னும் கோபமும் அழுகையும் அதிகரித்தது. அவளது தந்தைக்கு அழைப்பை துவங்கினாள். அவள் இதயம் படபடத்தது. அவள் நா வறண்டு வார்த்தைகள் வரமால் தொண்டை அடைத்தது.

எதிர் முனையில் அவளது தந்தை, என்னம்மா? சாப்பிட்டு முடிச்சாச்சா?

வெகுதூரத்திலிருப்பவர்களை இணைக்கும் இந்த கைபேசி இணைப்புகள் மட்டும் இல்லாமல் போயிருந்தால் என் வாழ்வு என்னவாயிருக்கும்? நினைத்தபடியே மௌனத்திருந்தாள்.

அவள் தந்தை மறுபடியும் கேட்டார் என்னம்மா?

ஒன்னுமில்லையப்பா..

அவளது குரலை வைத்து கண்டுபிடித்து விட்டார் பிரச்சனை மிகவும் தீவிரமானதென்று. என்னான்னு நீ சொல்லலைனா… எனக்கு எப்படித் தெரியும்மா? சொல்லு… என்றார்.

அழுகையுடனும் கோபத்துடனும் அவசர அவசரமாக நடந்ததை சொல்லி முடித்தாள்.

கேட்டு முடித்தவர், ஒரு புறந்தள்ளும் புன்னகையோடு, அந்நிகழ்வை புறந்தள்ளி முன்னோக்கி நகரும்படி ஆறுதல் கூறித் தேற்றினார்.

ஆனாலும், அவளுக்குள் எந்த அமைதியும் ஏற்ப்படவில்லை. ஒரு சமாதானமும் கிட்டவில்லை. அதற்கு மேலும் அவளது தந்தையை மனச்சங்கடத்தில் ஆழ்த்த மனமில்லாமல் சமாதானமானதாய் நடித்தபடி பேசி விட்டு, கைபேசி இணைப்பைத் துண்டித்தாள்.

அவளது வலி தீராதென்று அவள் தந்தைக்குத் தெரியும். அவரும் அந்த வலியை சுமந்து கொண்டே வாழ்வை நகர்த்துபவர் தானே.

இருவரும் தம் வலிகளை இருளுக்குள் தொலைக்கவும் வழியின்றி இதயத்திற்குள் புதைக்கவும் இடமின்றி உடலை படுக்கையின் மேல் கிடத்தினார்கள் தத்தம் வீடுகளில். உலகில் எத்தனை உயிர்கள் இத்தனை வலியுடன் தங்கள் இரவையும் பகலையும் கழிக்கின்றன என்பதனை யார் அறிவார்?

## விநோத வாழ்வியல்

மிகச்சிறந்த நீதிகளை வகுத்து விட்டு, அவைகளை எல்லாம் புத்தகங்களில் வைத்து பூட்டி விட்டு, அநீதியே நடைமுறை வாழ்க்கை என வாழ்ந்து பழகி விட்ட சமூகத்தில், நீதிகளை, சத்தியத்தை கடை பிடிக்க நினைப்பவரின் வாழ்க்கை தினமும் நரகமாகிக் கொண்டே இருக்கிறது. அதற்கு சிறந்த எடுத்துக் காட்டாய் என் வீடும், வீதிகளும், கிராமமும், நகரமும், மாவட்டமும், மாநிலமும், நாடும் இருப்பது மிகப் பெரிய வருத்தமளித்தபடியே இருந்தது. எப்போது கண் மூடினாள் என்று நினைவிலில்லை அவளுக்கு. நினைவு திரும்பிய போது மீண்டும் நேற்றைய கொடுமைகளுக்கு காரணமான நபரை சந்திக்க வேண்டியது வருமே என்ற நினைப்பு அவளுக்கு வந்ததில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை.

இத்தகைய அநீதிகளுக்குப் பயந்து ஒதுங்கிக் கொண்டால் வாழ்வதே சாத்தியமற்றுப் போய்விடும் என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டு வாழ்வின் பெரும் நேரத்தை அபகரித்துக் கொண்ட தன் பணிக்குப் புறப்பட்டாள். கற்றுக் கொடுக்குமிடத்தில் கொடிய எண்ணங்கள் நிறைந்தவர் நிறைந்திருப்பது கொடுமையே. அகிலம் அவ்வாறே இயங்குகிறதென்ற அப்பாவின் வார்த்தைகள் ஆறுதலாய் அவளை தன் பணிக்குக் கிளம்பிச் செல்ல ஊக்குவித்தது.

அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அடுத்த இடத்தில் ஆசிரியரை வைத்துப் போற்றுவதாய் தம்மட்டம் அடித்துக் கொள்ளும் இதே பூமியில் தான் இத்தகைய மனிதர்களும் ஆசிரியராய் இருக்கிறார்கள். இவர்கள் கற்பிப்பது எப்படி பயனளிக்கும்? எப்படி மாணவர்கள் வாழ்வில் மாற்றத்தைக் கொண்டு வரும்? கேள்விகள் அவள் அமைதியை மென்மேலும் உருக்குலைத்துக் கொண்டிருந்தன. இது போன்ற அநியாயம் இன்னொருமுறை யாருக்கும் நடந்திடக் கூடாதென்ற மன உறுதியுடன் புறப்பட்டாள்.

## உணவு இடைவேளை

மீண்டும் மதிய உணவு இடைவேளை இன்றும் அத்தகைய நிகழ்வு நிகழ்ந்து விடாமல் இருக்க தன்னால் ஆன அத்தனை முயற்சிகளையும் எடுத்தாள். வழக்கம் போல் பேசியபடியே ஆசிரியர்களும் ஆசிரியைகளும் தங்கள் உணவுகளை பரிமாறிக் கொண்டே உண்டனர். உண்டு முடித்ததும், தன் வாழ்நாளில் முதல் முறையாக தன்னைப் போல் பணிமாற்றக் கலந்தாய்வில் பணிமாற்றமாகி அப்பள்ளிக்கு சமீபத்தில் வந்திருந்த இன்னொரு ஆசிரியையை அவள் விழிகள் தேடித் தேடி கண்டு பிடித்தன. அவள் முன்பு கூறிய காரணத்திற்காக மட்டும் அந்த ஆசிரியை தேடிப் பிடிக்கவில்லை. எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை, ஆனாலும் சொல்லி ஆக வேண்டுமென்று அவள் மனம் அவளை தூண்டிக் கொண்டே இருந்தது. இன்னொரு ஆசிரியை வாயிலாக இன்னொரு ஆசிரியையும் அறிமுகமானாள்.

அவளுக்கு எப்படி துவங்குவதென்று தெரியவில்லை. அவர்களிடம் ஒரு வேண்டுகோளை மட்டும் வைத்தாள். அந்த வேண்டுகோளைக் கேட்ட இரண்டு ஆசிரியைகளும் அவளை விசித்திரமாகப் பார்த்தார்கள். அதற்கான காரணத்தை பிறகு கூறுகிறேனென்று கெஞ்சியபடி சொல்லி விட்டு பெருமூச்சு விட்டாள்.

*பெண்ணின் கருமுட்டையிலும் ஆணின் விந்தணுவிலும் குடியிருக்கும் இந்தப் பிரச்சனையை சமூகம் ஒரு போதும் தீர்த்து வைக்காது என்று அறிந்தும் அவள் முதல் அடி எடுத்து வைத்து விட்டதாய் அப்பெருமூச்சு இருந்தது.*

அவளது வேண்டுகோள், ஒரு விசித்திரமான வேண்டுகோள், சிறுபிள்ளைத் தனமான வேண்டுகோள் நாளையிலிருந்து நாம் பணியில் வந்து சேர்ந்த அதே காலகட்டத்தில் கலந்தாய்வின் மூலம் மாறுதலாகி ஆசிரியர் பணியில் வந்தமர்ந்த அவருக்கு உங்கள் உணவை பகிர்ந்தளிக்க வேண்டாம் என்பதே. அவள் சொல்லும் நிலை கண்டு வேறு வழியில்லாமல் ஒப்புக் கொள்வது போல் தலையசைத்து வைத்தாள் இன்னொரு ஆசிரியை.

மறுநாளும் வழக்கம் போல் பள்ளி தனது நடவடிக்கைகளை துவங்கியது, அவளது கண்கள் பார்க்கும் பார்வை முன்பு போல் இல்லை, அந்த ஆசிரியர், தனக்கென பணி ஏவும் நபர்களை தற்செயலாகக் கவனித்தாள். அவளுக்கு முன் இந்தியாவில் பிண்ணிக் கிடக்கும் பிரச்சனை விஸ்பரூபம் எடுத்து நின்றது. அந்த விஸ்பரூபத்திற்கு முன் இந்நாட்டில் சொல்லப்பட்டு வந்த கடவுளின் விஸ்பரூபம் எல்லாம் ஒன்றுமில்லாமல் போனது. அன்றைய தினமும் மதிய உணவு இடைவேளை வந்தது. அவள் நேற்று சொன்ன சொற்களின் பொருள் அந்த இரு ஆசிரியைகளுக்கும் புரியவே இல்லை போலும். அது அவளுக்கு அன்று புரிந்தது. அவள் மட்டும் தனக்கான தனி இடத்தை கூட்டத்திலிருந்தபடியே தேடி அமர்ந்து கொண்டாள். முதன் முதலாய் மிகக் கொடுமையாக தனிமையை உணர்ந்தாள். இந்நாட்டில் கிட்டவே கிட்டாது என்றறிந்தும் சுதந்திரக் காற்றைத் தேடி அவள் நுரையீரல்கள் இடைவிடாது ஆர்ப்பரித்துக் கொண்டே இருந்தன.

அந்த ஆசிரியர் அவ்விடத்தை விட்டு நகர்ந்ததும், அவள் நேற்றுச் சந்தித்த அதே இரண்டு ஆசிரியைகளிடம் மீண்டும் ஓடிச் சென்று, நான் சொன்னதை நீங்கள் ஏன் பின்பற்றவில்லை? என்னோடு வாருங்கள், அதற்கான காரணத்தை நீங்களே பாருங்கள் என்று இருவரையும் அழைத்துப் போனாள். அவர்கள் இருவரும் கண்டு வியப்படைவார்கள், கோபப்படுவார்கள் என்று அவள் நம்பியது வீண் போனது. அங்கு நிகழும் நிகழ்வை பார்த்து இருவரும் அவளைப் பார்த்து நக்கலாக சிரித்து விட்டு, போங்க டீச்சர் இதெல்லாம் ஒரு விசயமா? இதுக்குப் போயா… எங்கள அவருக்கு எங்க உணவை பகிர்ந்தளிக்க வேண்டாமுனு சொன்னீங்க!

## பார்வையெல்லாம்

அந்த ஆசிரியரும் மிகவும் நல்லவர், அவர் சமூகத்தில் நடக்கும் குழந்தை திருமணங்களுக்கு எதிராக போர்க்குரல் கொடுப்பவர், இலஞ்சம் கொடுத்து இடம் மாறுதல் பெறமாட்டேன் என்ற இலட்சியம் உள்ளவர். உண்மையைச் சொல்லப் போனால் அவருக்கு அரசியலில் இருக்கும் செல்வாக்கைப் பயன்படுத்தி அவர் நினைத்த இடத்தில் பணி மாறுதலை உடனே பெற்று விட இயலும். அதை அவரே பலமுறை சொல்லி இருக்கிறார். ஆனாலும் அதில் அவருக்கு சிறிதும் உடன்பாடில்லை. இத்தனை நல்ல குணமுள்ளவருக்குள்ளும் நஞ்சாய் ஓர் விதை விதைக்கப்பட்டு ஆலமரமாய் வளர்ந்து நின்றிருக்கு. அது மனிதத்தை மதிப்பதில்லை.

தனக்கு நிகழ்ந்த நிகழ்வை சொல்லாமலே இந்த விசயத்தை முடித்து விட வேண்டுமென்று அவள் துடித்தாள். ஆனால் அதற்கான சாத்தியக்

கூறுகளில்லை என்பதனை அந்த இரு ஆசிரியைகளின் இன்றைய செய்கைகள் நிரூபித்தன. நாளை இவ்வாறு கை நழுவ விட்டு விடக் கூடாதென உள்ளத்தின் உள்ளே உறுதி எடுத்துக் கொண்டாள். தனக்கு நிகழ்ந்தது இன்னொருவருக்கு நிகழ்ந்து விடக்கூடாதென திரும்பத் திரும்ப அவளுக்குள் சொல்லிக் கொண்டாள்.

அடுத்த நாளும் வந்தது, முன் கூட்டியே அந்த இரு ஆசிரியைகளிடமும் சொல்லி வைத்தாள். இன்று கவனித்துப் பாருங்கள், நீங்கள் கொடுத்த உணவிற்கு என்ன நிகழ்கிறதென்று? அதே நேரத்தில் இன்னொரு ஆசிரியரிடமிருந்து அவர் வாங்கும் உணவிற்கு என்ன நிகழ்கிறதென்று? சரி, சரி என்று தலையாட்டி வைத்தார்கள் இரு ஆசிரியைகளும். அன்றும் வழக்கம் போல் மதிய உணவு இடைவேளை வந்தது. அவள் முன்பு போல் இயல்பாக இல்லை. அவள் இயல்பில் நஞ்சு விதைக்கப் பட்டு விட்டது. இனி அவளை மீட்டெடுப்பது கடினம். ஆறு கண்களும் அவருக்கு பகிரப்பட்ட உணவின் மேல் தான் இருந்தன. இயல்பாக பார்ப்பது போல் பார்த்தாலும் அவர்களுக்கு அப்போது என்ன நிகழப் போகிறதென்ற படபடப்பு இருந்தது.

அந்த இரு ஆசிரியைகளின் நான்கு கண்களால் நம்பவே முடியவில்லை. அவர்களின் உணவின் மேல் அவரது கைகள் படவே இல்லை. அந்த உணவுகள் ஒதுக்கப்பட்டன. மூன்றாவது ஆசிரியரிடம் வாங்கிய உணவை மட்டும் அவர் ருசித்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அந்த ஆசிரியைகளின் கைகள் நடுங்கின. இதயம் வேகமாய் துடித்தது. அந்த ஆசிரியர் தனது உணவையும் இன்னொரு ஆசிரியரின் உணவையும் சாப்பிட்டு விட்டு அந்த ஆசிரியைகளின் உணவை மீதமாக்கி அவ்விடத்தினை விட்டு நீங்கினார்.

## கேள்விகள்

அவர்கள் நினைக்கும் முன்னே அவர்களின் கண்ணில் நீர் கோர்த்துக் கொண்டது. அனைவரும் அவ்விடத்தினை நீங்கியதும் அவளும் அந்த இரு ஆசிரியைகளும் பேச வார்த்தைகளின்றி மௌனித்திருந்தனர். அவள் தனது மனதை திடப்படுத்திக் கொண்டு அங்கு நிலவிய மௌனத்தை தன் வார்த்தைகளால் உடைத்தாள்.

அவருக்கு உங்களை உணவு கொடுக்க வேண்டாமென்று நான் சொன்னதற்கு காரணம் இது தான். நான் சொல்லுவதை நீங்கள் நம்பவில்லை என்றால் இன்னும் ஓரிரு தினங்கள் நீங்களே பாருங்கள் என்றாள். சில நாட்கள் இவ்வாறே கடந்தோடின. அந்த ஆசிரியை இருவருக்கும் மாபெரும் ஆச்சர்யம். கேலியாக அவளைப் பார்த்தவர்கள், அவளிடம் இதற்கு காரணம் எதுவாக இருக்குமென கேட்டார்கள். நீங்கள் ஏன் வலிய வந்து எங்களிடம் இந்த விசயத்தை சொன்னீர்கள்? என்று கேட்டார்கள். அவர் ஏன் எங்கள் உணவை ஒதுக்கித் தள்ளுகிறார்? சாப்பிடுவதில்லை? குப்பைகளில் வீசுகிறார்? கேள்விகள் பெருகிக் கொண்டே போயின.

எந்தக் கேள்வியை அவள் எதிர் நோக்க விரும்பவில்லையோ.. அதே கேள்வி அவளிடமே வைக்கப்பட்டது. அவளுக்கு உண்மையைச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை. அதற்கு அவளுக்குத் தைரியமுமில்லை. அந்த நொடியை நினைத்தாலே அவளது இதயத்தின் துடிப்பு அதிகரித்து, மூச்சு திணறியது, நாடி நரம்புகளெல்லாம் சூடேறியது.

அத்தனையும் தாண்டி அவளது கோபத்தின் பரிசாய் அவளது கண்களில் கண்ணீரும் வழியத் துவங்கியது. அவளது கண்ணீர் அந்த இரு ஆசிரியைகளின் கண்களிலும் ஊற்றெடுத்தது.

## தீட்டு…

அவள் தனது பதைபதைக்கும் இதயத்துடன் அன்றைய நிகழ்வை இருவருக்கும் விளக்கத் துவங்கினாள்.

அந்தக் கொடிய நிகழ்வு நிகழ்ந்த நாளன்று, அவளும் அந்த ஆசிரியர் மட்டும் ஆசிரியர்கள் ஓய்வறையில் அன்றைய மதிய உணவு உண்ண அமர்ந்திருந்தார்கள். வழக்கம் போல் அவள் தான் கொண்டு வந்திருந்த உணவிலிருந்து சிறு பங்கெடுத்து அவருக்கு கொடுத்தாள். அவர், வேண்டாமென்று மறுத்தார். அவளுக்கு மறுத்ததற்கான காரணம் என்னவென்று கேட்காமல் இருக்க முடியவில்லை. தொண்டை வரை வந்த வார்த்தை வாயிலிருந்த சோற்றையும் தாண்டி வெளியே வந்து விட்டது.

ஏன் சார் வேண்டான்னு சொல்றீங்க?

அவள் அவரிடம் இருந்து கேட்ட பதில் அவளை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. **“நீங்க எனக்கு உணவு கொடுத்தால் உங்களுக்கு பாவம்”** என்றார்.

என்ன சார் சொல்றீங்க? எனக்குப் பாவமா?

**ஆமா. நாங்க யாருனு தெரிஞ்ச பிறகும் எனக்கு உணவு கொடுத்தால் உங்களுக்குப் பாவம்**.

நீங்க யாரு சார்? இதுக்கு முன்னாடி என் கிட்ட வாங்கி சாப்பீட்டிருக்கீங்களே?! எல்லாருமே பகிர்ந்து சாப்பிட்டிருக்கோமே!

**அப்போ, நீங்க யாருன்னு தெரியாது. உங்க ஆளுகள[1] எங்க ஊருக்குள்ளேயே விட மாட்டோம். அப்படி வந்துட்டா "குட்டி வெட்டிவிட்டுட்டுத்தான்" தீட்டுக் கழிப்போம்.**

இது என்ன சார் நியாயம்? நாங்க கடை வச்சுருந்தா.. நீங்க வந்து சாப்பிட மாட்டீங்களா?

***சாப்பீடுவோமே! அது தொழில். அதில் தீட்டு இல்ல. ஆனா, உங்க வீட்டு அடுப்பில சமைச்ச சாப்பாட எங்களுக்கு நீங்க கொடுக்க கூடாது. அது எங்களுக்கு தீட்டு. உங்களுக்குத் பாவம். காப்புக் கட்டியிருக்கும் எங்களுக்கு நீங்க / உங்க ஆளுக உணவு கொடுக்கக் கூடாது அது உங்களுக்கு பாவம்.***

அதுவரை உயர்வான இடத்திலிருந்த அவர், சாக்கடையில் உழலும் புழுவைப் போல் அவள் முன் நெளிந்து கொண்டிருப்பது போல் இருந்தது.

அவளுக்கு கோபமும் கண்ணீரும் பொங்கிக் கொண்டு வந்தது. இனிமேல் இந்த ஜந்துவிற்கு எதுவும் கொடுக்கக் கூடாதென்று தன்னுள் எண்ணிக் கொண்டாள். ஒரு நல்ல ஆசிரியரே, இப்படி இருந்தால், ஒரு சக ஆசிரியைக்கே இத்தனை கொடுமை என்றால் சாமாணியர்களின் நிலை இந்த மண்ணில் என்ன? அவள் இதயம் படபடத்துக் கொண்டே இருந்தது.

[1] சாதிக்காரவங்கள

இன்னவென்று முழுவதும் அறியா “எக்ஸ்” மற்றும் “வொய்” குரோமசோம்களே மனிதனை மனித இனமாக மண்ணில் சுற்றித் திரிய விட்டிருக்கிறது என்று அறிவியல் படித்து அதை பிள்ளைகளுக்கும் சொல்லிக் கொடுத்து, சமத்துவ சமுதாயம் மலர பிள்ளைகளுக்கு கற்பிக்க வந்த ஆசிரியரின் நெஞ்சில் இத்தனை அழுகிப் போன அழுக்குகள் நிறைந்திருந்தால், பள்ளிகளைக் கட்டி வைத்து நாம் என்ன மாற்றங்களை கொண்டு வந்து விட முடியும்?

கொடிய நினைவலையிலிருந்து அவளை அந்த இரு ஆசிரியைகளும் மீட்டெடுத்து வந்தார்கள். உண்மையைச் சொல்வதென்றால் இரு ஆசிரியைகளும் அந்த கொடிய நினைவலையிலிருந்து மீண்டு வந்தார்கள். அவர்கள் கண்கள் சிவந்திருந்தன. அதில் ஒரு ஆசிரியை இந்தக் காலத்திலும் இப்படி ஒரு மனிதரா? கேட்கவே ஆச்சர்யமாகவும் வெட்கமாகவும் உள்ளது. இன்னொரு ஆசிரியை, நாம் என்ன பாவம் செய்தோம்? உழைத்து உழைத்தே உரிமைகளின்றி வாழ்வை அடிமைகளாய் கழித்த நாம் முன்னேறவே கூடாதா? இம்மண்ணில் அது சாத்தியமே இல்லையோ? கேள்விகள் அவ்விடத்தை நிறைத்துக் கொண்டே இருந்தது.

## நஞ்சு விதை

அவரென்ன நம் உணவை புறக்கணிப்பது. நாம் புறக்கணிப்போம், அவருக்கு உணவு கொடுப்பதை நிறுத்துவோம். அவரவர் மனதுக்குள் உறுதி எடுத்துக் கொண்டனர். அவரின் நெஞ்சில் விதைக்கப்பட்டிருந்த நஞ்சு அறிந்தோ, அறியாமலோ அம்மூவரின் நெஞ்சிலும் விதைக்கப்பட்டு விட்டது. இனி அவர்கள் அவர்களாக இருக்கப் போவதில்லை. அவர்கள் ஏற்கனவே சிறிதளவேனும் மீண்டிருந்த அடிமை எண்ணத்திற்குள் மீண்டும் போய் வீழ்ந்து விடப் போகிறார்கள். அவர்கள் முன்னேற்றம் மீண்டும் தடைபடப் போகிறது.

அவளுக்குள், கேள்விகள் பல்கிப் பெருகிக் கொண்டே இருந்தது.

நம் அடுப்பில் சமைப்பதை சாப்பிட்டால் தீட்டென்றால் அதில் என்ன நியாயம்?

நம்மிடம் உணவு வாங்காமல் இருக்கலாம், அது அவரது உரிமையாகக் கூட இருக்கலாம். நாம் இன்ன சாதி என்ற காரணத்திற்காக வாங்க மறுப்பது என்ன நியாயம்?

அவர் இன்ன ஆளுனு நாம் அறிந்த கொண்ட பின் கொடுத்தால் நமக்குப் பாவம் என்பதும் என்ன விதமான நீதி?

இனி அவர் மூஞ்சியில் எப்படி விழிப்பது?

சந்திக்கும் வேளையில் வணக்கம் சொல்வது எப்படி?

யார் கண்டு பிடித்தார்கள் இந்த தீட்டை?

அது ஏன் எங்களுக்கு மட்டும்?

அவர்கள் எப்படி தீட்டு இல்லாதவர்கள் ஆனார்கள்?

என் உழைப்பு மட்டும் எப்படி காலம் காலமாக தீட்டு இல்லாமல் இருக்கிறது?

நான் கொடுக்கும் என் பணம் எப்படி தீட்டு இல்லாமல் ஆனது?

என் உழைப்பில் இந்த சமூகம் அடைந்த நன்மாற்றங்கள், உயர்வுகள் எல்லாம் எப்படி தீட்டு இல்லாமல் ஆனது?

நானே மதம் மாறியதும் எப்படி உறவாகிப் போகிறேன்?

உலகத்திலிருக்கும் மிகப் பழமையான, கொடிய சமூகப் பிரச்சனைகளில் ஒன்றான இந்த சாதிப் பிரச்சனை இந்தியாவிலிருந்து என்று தான் ஒளியும்?

அனைத்து மக்களும் சமமாக வாழும் சூழல் என்று தான் ஏற்படும்?

அவளே நினைத்தாலும் அவளால் அவளுக்குள் தோன்றும் கேள்விகளை நிறுத்திட முடியவில்லை.

***உங்கள் உள்ளத்தில் ஏதேனும் ஒரு ஓரத்தில் இன்னும் "தீட்டு" எண்ணம் குடி கொண்டிருந்தால் உடனே அதனை வெளியேற்றுங்கள். அது மிகவும் ஆபத்தானது. சமூகத்தை எப்போதும் அழிவுக்கு இட்டுச் செல்லும் தேவசக்தி நிறைந்தது.***

*விரைவில் அடுத்த படைப்புடன் சந்திக்கிறேன்…*

**கல்விக்கு உதவலாமே!**

அன்புடையீர்,

உங்கள் அனைவருக்கும் எனது இதயம் கனிந்த வணக்கங்களும் வாழ்த்துக்களும். தொடர்ந்து வாசித்து ஆதரவளித்து வருவதற்கு நன்றி.

இந்த வார்த்தைக் கோர்வைகள் உங்களுக்கு பிடித்திருந்தால்..

**உங்களிடம் ஒரு விண்ணப்பத்தை வைக்கிறேன், அது மிகவும் முக்கியமானது மற்றும் அவசியமானது. இன்றைய சூழலில் கல்வியின் அவசியத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். தற்சமயம் இந்த வரிகளை நான் எழுதி முடிப்பதை சாத்தியப்படுத்தியதும், நீங்கள் வாசித்துக் கொண்டிருப்பதற்கும் அதுவே காரணம், அத்தகைய அடிப்படை பலன் அனைவருக்கும் கிடைத்திட வேண்டுமென நீங்கள் கருதினால்..**

- **குறைந்தது ஏதேனும் ஒரு அரசுப்பள்ளி மாணவனுக்கோ / மாணவிக்கோ அவர்கள் படிப்புக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவிடுங்கள்**
- **ஏதேனும் ஒரு ஏழை மாணவனுக்கோ / மாணவிக்கோ கல்லூரியில் படிக்க உதவிடுங்கள்**
- **உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அரசுப்பள்ளி மாணவ – மாணவியருக்கு ஏதேனும் ஒரு வகையில் வழிகாட்டிடுங்கள்**
- **அரசுப் பள்ளிகள் மேலும் சிறப்பாக செயல்பட எந்த வகையிலேனும் உதவிடுங்கள்**

மேற்கூறிய வேண்டுகோள்கள் நிறைவேற்றப்பட வேண்டியவை எனக் கருதினால் தொடர்ந்து பலரிடமும் இந்த வேண்டுகோளை நீங்களும் பகிர்ந்து கொள்ளுங்கள்!

படைப்புகள் பற்றிய உங்கள் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் எண்ணங்கள் என்னை வந்து சேர இந்த மின்னஞ்சல் முகவரியை பயன்படுத்தவும்.

**karuveli.mahendran@gmail.com**

தங்கள் ஆதரவுக்கு மீண்டும் நன்றி!

*அன்புடன் | கருவெளி ராச.மகேந்திரன்*

## எனது இதர படைப்புகள்:

**இதுவரை :**

*அமேசானில் கிடைக்கக்கூடிய தலைப்புகள்*

1. நாலு சொல்லில் - தொகுப்பு 1 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
2. நாலு சொல்லில் - தொகுப்பு 2 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
3. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 1 | கவிதைத் தொகுப்பு
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 2 | கவிதைத் தொகுப்பு

*இலவசமாக வெளியிடப்பட்டுள்ள தலைப்புகள்*

1. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியான பற்றிய தொகுப்பு)
2. என் மரணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்
3. மக்களாட்சியில் என் கடைசிப் பயணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்

*தற்போது எழுதிக் கொண்டிருப்பவை :*

1. மரணப் பிடியிலிருந்து - சிறுகதைகள் தொகுப்பு - நவம்பர் 2018
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 3 | கவிதைத் தொகுப்பு - டிசம்பர் 2018
3. அவளோடு ஒரு பயணம் - கவிதைத் தொகுப்பு ( மீ டூ ) - சனவரி 2019
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 4 | கவிதைத் தொகுப்பு - பிப்ரவரி 2019

*ஒலிப் புத்தகங்கள் :*

1. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் பகுதி 1 - நவம்பர் 2018 (மறு வெளியீடு)
2. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் - டிசம்பர் 2018 (மறுவெளியீடு)

*காணொளிக் கவிதைகள் :*

1. நாலு சொல்லில் - முழுத் தொகுப்பு ( யூடியூப் சேனலில் உள்ளது)
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 1 ( டிசம்பர் 2018)

*இசை வெளியீடுகள் :*

1. Where I am Going - ஏப்ரல் 2018
2. EDM 1.0 - ஜீன் 2018
3. So Easy - அக்டோபர் 2018
4. Protect Me - நவம்பர் 2018
5. The Inner Journey - Series - டிசம்பர் 2018

*2019 முதல், வாரம் ஒரு இசைக் கோர்வை வெளியிடத் திட்டமிடப்பட்டுள்ளது.*

## இணைந்திருக்க சில வழிகள் :

https://www.karuveli.wordpress.com | மின்னஞ்சல் : karuveli.mahendran@gmail.com

கைபேசி எண் : 94455 28556 | படைப்புகளை உங்கள் மின்னஞ்சலில் பெற்றிட ஒரு முறை பதிவு செய்து கொண்டால் போதுமானது. https://goo.gl/LC2dTD

## யூ- டியூப் சேனல்கள்:

கருவெளி : https://goo.gl/pSYy8Y

ஊமைகளின் குரல் : https://goo.gl/qXn34p

மீயுசிக்கா : https://goo.gl/v33JY9

## உதவிட விரும்பினால்:

நீங்கள் உதவ விரும்பியும் உங்களால் சரியான மாணவரையோ, பள்ளியையோ, தேவைப்படும் நபர்களையோ கண்டறிய இயலாமல் போனால் என்னைத் தொடர்பு கொள்ளவும். என்னால் இயன்றவரை என்னிடமுள்ள தகவல்களை பகிர்கிறேன்.

விலையின்றி அனைவரும் படிக்கவும் பகிரவும் வழிவகுக்கும் "கிரியேட்டிவ் காமன்ஸ்" உரிமம்" மூலமாக தொடர்ந்து பல படைப்புகளை வெளியிடும் இந்த முயற்சிக்காக நீங்கள் உங்கள் பங்களிப்பை செய்திட விரும்பினால்

| | |
|---|---|
| ICICI Bank<br>(நீங்கள் இந்தியாவில் வாழ்ந்தால்)<br><br>UPI மூலம் அனுப்ப விரும்பினால் | R. Mahendran<br>A/c no. 10400 150 1923,<br>Branch- Theni ICICI,<br>IFSC code: ICIC0006225,<br>Account type :Saving<br><br>UPI : karuveli@icici |
| PayPal<br>(உங்களிடம் இந்திய வங்கிக் கணக்கு இல்லை என்றாலோ, நீங்கள் அயல்நாட்டில் வாழ்ந்தாலோ) | https://www.paypal.me/karuveli |

*அன்புடனும் வாழ்த்துகளுடனும்*

*கருவெளி ராச. மகேந்திரன்*

## என்னைப் பற்றி

மேற்குத் தொடர்ச்சி மலையின் பிரமாண்டத்தை தினந்தோறும் இரசிக்க வாய்ப்பிருக்கும், இவ்வுயிர் அழிந்தால் ஐந்தாறு ஆண்டுகளில் மனித இனம் அழிந்து போகுமென்ற புகழ் பெற்ற உயிரின் பெயர் கொண்ட "தேனி"யில் வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்கு பெற்றோரால் வைக்கப்பட்ட பெயர் மகேந்திரன். எனக்கு விபரம் தெரிந்து, என் தேடல் துவங்கிய நாள் முதலாய் எனது எழுத்துகள் மூலம் நான் பதிவு செய்யத் துவங்கிய நாள் முதலாய் கரு = ஆதியானது, வெளி = எல்லையற்றது, என்ற இரு சொற்களை இணைத்து "கருவெளி" அத்துடன் என் பெற்றோர் பெயரின் முதல் எழுத்துக்களை இணைத்து "கருவெளி" ராச. மகேந்திரன் என்ற பெயரில் எழுதி வருகிறேன்.

ஏறக்குறைய 15 ஆண்டுகள் காற்றாலை நிறுவனங்களில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி துறை, செயல்திறன் கண்காணிப்பு மற்றும் மேலாண்மை துறைகளில், பல்வேறு மட்டங்களில் பணியாற்றி விட்டு தற்சமயம் முழு நேரம் எழுத்துப் பணியோடு, கிராமப்புற மாணவ மாணவியர், அரசுப்பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்கு என்னாலான அறிவுப்பகிர்வைச் செய்து கொண்டிருக்கிறேன்.

மிகச் சமீபத்தில் கற்றுக் கொண்ட ஒலி, ஒளி மற்றும் இசை சம்பந்தமான அறிவினை சமூகத்திற்கு பயனளிக்கும் வகையில் பல வடிவங்களில் கொண்டு வரும் முயற்சியை துவங்கி உள்ளேன். தற்சமயம் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க, கவிதைகள் அனுபவப் பகிர்வுகளுக்காக "கருவெளி ராச.மகேந்திரன்", பொது மக்களுக்குப் பயன்படும் அரசு மற்றும் அரசு சார் தகவல்களை பகிர்ந்திட "ஊமைகளின் குரல்" மற்றும் இசைக்காக "மியூசிக்கா" எனும் மூன்று யூடியூப் சேனல்களையும் ஆரம்பித்து தகவல்களை பரிமாறி வருகிறேன்.

மேலும் பல முயற்சிகளை சமூக பங்களிக்கும் வகையில் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் இயற்கையோடு என் வாழ்க்கை பயணம் தொடர்கிறது. உங்களைப் போலவே என்னைப் பற்றி நானும் அறிந்து கொள்ள நிறைய விசயங்கள் இருக்கின்றன. வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

*அன்புடன் - கருவெளி ராச.மகேந்திரன்*

